Regd. No 2975

ஸ்ரீ:

# SRI RAMANUJAN

*Editor*: P. B. ANNANGARACHARYA, KANCHEEPURAM-3

## ஸ்ரீ ராமாநுஜன்—279

ஆசிரியர் : P. B. அண்ணங்கராசாரியர்.

வருஷச் சந்தா ரூ. 10 ஜீவியச் சந்தா ரூ. 58

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.



ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி •
தாழ்வாது மில்குரவர் தாம்வாழி•—ஏழ்பாரு
முய்ய வவர்க ளுரைத்தவைகள் தாம்வாழி •
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.

1—1—1972ல் வெளியிடப்பட்டது.

ஸ்ரீ:

# ஸ்ரீராமாநுஜன்—279







சென்னை ஸத்க்ரந்த ப்ரகாசன ஸபையின் சார்பாக மாதந்தோறும் வெளிவருவது

ஆசிரியர் : P. B. அண்ணங்கராசாரியர்.

| ஸம்புடம் 24 | விரோதிக்ருத்ஸ மார்கழிமீ 1—1—1972 | ஸஞ்சிகை 3 |
|---|---|---|

## "மார்க்கசீர்ஷ மஹிமை"

மாஸங்களின் நாமநிர்தேசம் மூன்று வகையாக உலகில் வந்திருக்கின்றது. மேஷம் வ்ருஷபம் மிதுநம்...இத்யாதி நிர்தேசங்கள் ஸௌரமானப்படியே நிகழுமவை. சைத்ரம் வைசாகம் ஜ்யேஷ்டம்...இத்யாதி நிர்தேசங்கள் சாந்த்ரமானப் படியே நிகழுமவை. மது, மாதவம், சுக்ரம், சுசி...இத்யாதி நிர்தேசங்கள் வேதச் சாயையில் அமைந்தவை. தைத்திரீய ஸம்ஹிதையில் முதல்காண்டம் நான்காவது ப்ரச்னத்தில்—"மதுச்ச மாதவச் ச சுக்ரச்ச சுசிச்ச..." இத்யாதியையும், அதிலேயே நான்காவது காண்டத்தில் நான்காவது ப்ரச்னத்தில்—" மதுச்ச மாதவச் ச வாஸந்திகா வ்ருதூ, சுக்ரச்ச சுசிச்ச க்ரைஷ்மா வ்ருதூ...." இத்யாதியையும் காண்க. இந்த மது மாதவாதி நாமநிர்த்தேசம் வேதத்தில் மட்டும் வழங்குவது. உலகவழக்கில் இல்லை ஆனால் கவிகள் சுலோகங்களில் மதுமாதவாதி நாமங்களைச் சேர்த்துக் கவியியற்றுவதுண்டு. "நபஸ்யமாஸி ச்ரோணாயாம் அவதீர்ணாய" இத்யாதி காண்க.

சைத்ரம் வைசாகம் இத்யாதி சாந்த்ரமாந வ்யபதேசங்களை அடியொற்றியே சித்திரை வைகாசி...என்னும் தமிழ் மாத வழக்குகள் தோன்றின. மார்க்க சீர்ஷம் (அல்லது) மார்க்கசிரம் என்கிற ஸம்ஸ்க்ருத பதத்தின் திரிபாகவே மார்கழியென்கிற தமிழ்ப்பெயர் வழங்கலாயிற்று. மிருகசீர்ஷ நக்ஷத்திரமும் பௌர்ணமாஸியும் சேரப்பெறுகிற மாதம் மார்க்கசீர்ஷ மெனப்படும். இச் சொல்லை, மார்க்க—சீர்ஷ என்று பிரித்துத் திருப்பாவைக்கு ஏற்ற பொருளைக் கொள்வதும் தகும். அதாவது,

மார்க்கங்களில் தலையானது மார்க்க சீர்ஷம்; மார்க்கமென்றது—உபாயமென்றபடி. உபாயங்களில் தலையானது—என்றதாயிற்று. கர்மஜ்ஞான பக்திப்ரபத்திகளுக்கும் மேலே ஆசார்யாபிமானமென்பது தலையான உபாயமாகும். அதுதான் மார்க்க சீர்ஷம். அதுதான் மார்கழி. திருப்பாவை தொடங்கும்போதே மார்கழியென்று தொடங்கின ஆண்டாள் தான் கடைப்பிடித்ததும், திருப்பாவையில் ஸ்வாபதேசார்த்த மரியாதையில் காட்டினதுமான ஆசார்யாபிமானத்தை ஒருவாறு நினைவூட்டுகின்றாள்.

அலங்கார சாஸ்திரத்தில் கைதேர்ந்தவர்களுக்குச்
சில சுவைமிக்க விஷயங்களை உபஹரிக்கின்றோமிங்கு.

காவ்யரஸிகர்களுக்கு அலங்கார சாஸ்த்ரம் ஜீவ நாடியாகவுள்ளது. அழகு பெறுத்துவது அலங்காரமெனப்படும். சப்தாலங்காரமென்றும் அர்த்தாலங்கார மென்றும் இருவகைப்பட்டவிதில் சப்தாலங்காரத்திற் காட்டிலும் அர்த்தாலங்காரம் மேம்பட்டது. வடமொழியில் அலங்காரமென்பது தென் மொழியில் அணியெனப்படும். சொல்லணி பொருளணி யென்கிற பாகுபாடு அதிலுமுண்டு. ப்ராஸம் முதலானவற்றால் சொற்களுக்கு அழகையுண்டாக்குவது சொல்லணி. இப்போது நாம் பொருளணியில் ஏகதேசம் ஆராய்ச்சி செய்ய இழிகின்றோம். "இத்தம் சதமலங்காரா:" என்றபடி நூறு வகையாகவுள்ள அர்த்தாலங்காரங்களில் ஸமாஸோக்தி, அப்ரஸ்துத ப்ரசம்ஸை, ப்ரஸ்துதாங்குரம் என்கிற மூன்று அலங்காரங்களைப் பற்றி முன்னம் பேசுகிறோம்.

## — ஸமாஸோக்தியலங்காரம் —

"ஸமாஸோக்தி: பரிஸ்பூர்த்தி: பரஸ்துதே அப்ரஸ்துதஸ்ய சேத்" என்பது ஸமாஸோக்தியலங்காரத்தின் லக்ஷணம். கவி ப்ரக்ருதமான வொரு செய்தியைக் குறித்துப் பேசுகையில் சொற் செறிவால் அப்ரக்ருதமான ஒரு செய்தியும் தோன்ற நின்றால் அங்கு ஸமாஸோக்தியலங்காரமாகும். "முன்பு ஒருபுறம் மேடாயிருந்த இடமெல்லாம் இப்போது பள்ளமாயிற்று; மற்றொருபுறம் பள்ளமாயிருந்த விடமெல்லாம் மேடாயிற்று.' என்கிறானொருவன். இவ்விஷயம் அவனுக்கு ப்ரக்ருதம்; இதிலிருந்து அப்ரக்ருதமான வொரு விஷயம் தோன்றுவது காணலாம்; அதாவது 'தனிகனாயிருந்தவன் தரித்ரனாகிறான்; தரித்ரனாயிருந்தவன் தனிகனாகிறான்' என்று. ஆகவே இங்கு ஸமாஸோக்தியலங்காரம்,

## — அப்ரஸ்துத ப்ரசம்ஸாலங்காரம் —

"அப்ரஸ்துதப்ரசம்ஸா ஸ்யாத் ஸா யத்ர ப்ரஸ்துதாச்ரயா" என்பது இவ்வலங்காரத்தின் லக்ஷணம். ப்ரக்ருதமான வொரு செய்தியைத் தோற்றுவிப்பதற்காகவே அப்ரக்ருதமான வொரு செய்தியைக் கவி வருணிப்பது அப்ரஸ்துத ப்ரசம்ஸாலங்காரமாகும் பறவைகளில் மழைத் தெய்வத்தையன்றி மற்றெவரையும் எதிர்பாராத சாதகபக்ஷிதான் சிறந்தது' என்றான் ஒரு கவி. அவனுக்கு இவ்விஷயம் விவக்ஷிதமன்று; 'எம்பெருமானிடத்திலன்றி மற்றெவரிடத்திலும் பல்லைக் காட்டாத பரமைகாந்தியே சிறந்தவன்' என்பதைச் சொல்லவிரும்பி, * ப்ரபந்நே

சாதகந்யாய: ❀ என்ற முதுரையை மனத்திற்கொண்டு அப்ரக்ருதமான சாதக பக்ஷிப்ரசம்ஸையைச் செய்தான் கவி. ஆகவே இங்கு அப்ரஸ்துதப்ரசம்ஸை.

## — ப்ரஸ்துதாங்குராலங்காரம் —

இனி ப்ரஸ்துதாங்குரமென்னுமலங்காரத்தைப்பற்றிக் கேண்மின்; இதைப் பற்றின விமர்சத்தை முக்கியமாகக் கொண்டே இக்கட்டுரை யெழுதத் தொடங்க லாயிற்று. "ப்ரஸ்துதேந ப்ரஸ்துதஸ்ய த்யோதநே ப்ரஸ்துதாங்குர:" என்று இவ்வலங்காரத்திற்கு லக்ஷணம் கூறப்பட்டுள்ளது. கவி வருணிப்பதும் ப்ரக்ருத மான செய்தி; அதிலிருந்து தோற்றுகின்ற வொரு செய்தியும் ப்ரக்ருதமானது; இப்படிப்பட்டவிடத்தில் ப்ரஸ்துதாங்குராலங்காரமாம். இதற்கு சந்த்ரா லோகத்தில் காட்டியுள்ள உதாரணம் யாதெனில்; ❀ கிம் ப்ருங்க! ஸத்யாம் மாலத் யாம் கேதக்யா கண்டகேத்தயா ❀ என்பது. இது வண்டை நோக்கி ஒரு காமினி சொல்லுவது 'வண்டே! நல்ல மாலதீபுஷ்பமிருக்க, முள் நிறைந்த தாழையை ஏன் விரும்புகிருய்?' என்பது இதன் பொருள். இதில் வாச்யார்த்தத்திற்குமேல் வ்யங்க்யார்த்தமொன்று கண்டறியவேணும். வாச்யார்த்தம் தெரிந்ததே. வ்யங்க் யார்த்தம்—அபாயமற்ற மனைவியிருக்க அவளைவிட்டு அபாயம் மிக்க வேற்று மாதரிடத்தில் விருப்பங்கொண்ட கணவனை நோக்கிக் காதலி சொல்லுவதாம். ஆக இவ்விரண்டு பொருளும் ப்ரக்ருதமே யென்றும், 'ஒன்று ப்ரக்ருதம், மற்ருென்று அப்ரக்ருதம்' என்பது கிடையாதென்றும் கொள்ளப்படுகிறது.

குவலயானந்தகாரரான அப்பயதீக்ஷிதர் இங்கு எழுதுவது என்னவென் ருல், தன் கணவனேடுகூட உத்யானவனத்திற்குச்சென்ற காதலியொருத்தி அங்கு வண்டைக் கண்டு இங்ஙனே சொன்னுளாதலால் இது ப்ரக்ருதமானதே; இதிலிருந்து வ்யங்க்யமானது பரநாயிகாஸக்த ஸ்வகீயநாயக சிக்ஷணம்; அதுவும் ப்ரக்ருதமானதே என்று. உடனே அவர் தாமே ஒரு சங்கையைக் கிளப்பி ஸமா தானமு மெழுதியுள்ளார்; (அதாவது) அஃறிணையானவண்டை நோக்கிச் சொல்லு வதென்பது பொருந்தாதாகையாலே இங்கு வாச்யார்த்தம் ப்ரக்ருதமாக இருக்க முடியாதேயென்று சங்கித்து. இங்ஙனே பலவிடங்களில் காண்கிருேமென்று, மரத்தைநோக்கி ஒருவன்சொன்னதும், அதற்கு மரம் விடைகூறினதுமான ச்லோகமொன்றை யெடுத்துக்காட்டி ஸமாதானம் பண்ணி யிருக்கிருர்.

சந்த்ராலோககாரர் காட்டின "கிம் ப்ருங்க! ஸத்யாம் மாலத்யாம்'; என்கிற உதாரணத்தில் வண்டை விளித்துச் சொல்லுவதுமட்டுமேயுள்ளது தீக்ஷிதர் காட்டியுள்ள "கஸ் த்வம் போ: கதயாமி" என்கிற சுலோகத்தில் மரத்தை விளித்து வினவுவதும், வினவப்பட்ட மரம் விடை கூறுவதுமான அமைப்பு உள்ளதனுல் இந்த வினுவிடைகள் அஸம்பாவிதமென்பது அசைக்க முடியாததாம். ஸுபாஷி தரத்ன பாண்டாகாரத்தில் அந்யாபதேசச்லோகங்களை ஆயிரக் கணக்காகக் காண் கிருேம்—மேகாந்யோக்தி:, ப்ரமராந்யோக்தி:, வ்ருக்ஷாந்யோக்தி:, ம்ருகாந்யோக்தி: என்று மகுடங்கொண்ட சுலோகங்களெல்லாம் பெரும்பாலும் அப்ரஸ்துத ப்ரசம் ஸாலங்காரத்திற்கு லக்ஷ்யமாகக் கூடியவையேயாகும். "ப்ரஸ்துதேந ப்ரஸ்து தஸ்ய த்யோதநே ப்ரஸ்துதாங்குர:" என்ற லக்ஷணத்திற்குச் சேர ஆலங்காரிகர்

காட்டின ஸமஞ்ஜஸமான லக்ஷ்யம் ஒன்றுகூட நாம் கண்டிலோம். திருப்பாவை முழுதும் இவ்வலங்காரத்திற்கு லக்ஷ்யமென்று உபபாதிப்பவனடியேன்.

## — முத்ராலங்காரமென்றும் ஒன்றுண்டு —

* ஸூச்யார்த்த ஸூசநம் முத்ரா ப்ரக்ருதார்த்தபரை: பதை: * என்பது அதன் லக்ஷணம். சிலசில பதங்களையிட்டு கவி ஸூசிப்பிக்க நினைத்த (வேறு) அர்த்தத்தை ஸூசிப்பித்தல் முத்ராலங்காரமென்றபடி. ஒருவரை ஸ்துதிசெய்துகொண்டு போகையில் நக்ஷத்ரத்தையோ ஸம்வத்ஸரத்தையோ வ்ருத்தத்தையோ, ஸூசிப்பிக்க விரும்பி அதற்கு அநுகுணமான பதத்தையோ பதங்களையோ ப்ரயோகிப்பர்கள் கவிகள்; அங்கு முத்ராலங்காரமாகும். திருப்பாவையில் இவ்வலங்காரமும் பல விடங்களில் நன்கு தோன்ற நின்றது. திருப்பாவைக்கு அடியேனெழுதி வெளியிட்டுள்ள ஐந்தாறு வியாக்கியானங்களில் இதெல்லாம் விளங்கக் காணலாம். ஆயினும் வழிகாட்டிவிடாமல் இங்கும் சுருக்கமாகத் தெரிவிக்கலாகிறது.

## — நீராட்டத்தின் மருமம் —

திருப்பாவையில் முதற்பாட்டில் * நீராடப்போதுவீர் போதுமினோ * என்றழைக்கப்படுகிறது. மூன்றும்பாட்டில் * நாங்கள் நம்பாவைக்குச் சாற்றி நீராடினால் * என்றும், நாலாம்பாட்டில் * நாங்களும் மார்கழி நீராட மகிழ்ந்து * என்றும், இருபதாம்பாட்டில் * இப்போதே யெம்மை நீராட்டு * என்றும், இருபத்தாறும் பாட்டில் * மார்கழி நீராடுவான் * என்றும் இங்ஙனே பல விடங்களில் நீராட்டம் ப்ரஸ்தாவிக்கப்படுகிறது. ஆய்ச்சிகள் நீராடுமிடமான நீர்நிலைக்குச் சென்றார்களென்று கண்டிலோம். வ்யாக்க்யாதாக்களான பெரியவாச்சான் பிள்ளை முதலான பூருவாசாரியர்கள் "நீராடவென்னுமித்தால் இவர்கள் நினைக்கிறது க்ருஷ்ணஸம்ச்லேஷம். தமிழரும் கலவியைச் சுனையாட லென்றார்கள். * ஏஷ ப்ரஹ்ம ப்ரவிஷ்டோஸ்மி க்ரீஷ்மே சீதமிவ ஹ்ரதம் *...என்றும் சொல்லிற்றிறே" என்றருளினர். இதுவன்றியும், ஆண்டாள் தன்னை நிர்த்தேசிக்குமிடங்களிலெல்லாம் * பட்டர்பிரான் கோதை * என்றும் * புதுவையர்கோன் விட்டுசித்தன்கோதை * என்றும் தனக்கு ஆசார்ய ஸம்பந்தத்தை நிருபகமாக்கியே நிர்தேசித்தவளாகையாலே தான் ஆசார்யாபிமானத்தில் பழுத்தவளென்பதைப் பாசுரந்தோறும் காட்டியிருப்பதுங் காண்கிறோம். நீராட என்னும் ஸ்ரீஸூக்தியாலே * கரசரண ஸரோஜே காந்திமந்நேத்ரமீநே ச்ரமமுஷி புஜவீசிவ்யாகுலே அகாதமார்க்கே, ஹரிஸரஸி விகாஹனம் தெரிவிக்கப்படுவதுபோலே, (திருவிருத்தத்தில்) * காலை நன்ஞானத்துறை படிந்தாடிக் கண்போது செய்து * என்று ஆழ்வாரருளிச்செய்தபடியே ஞானத்துறையான ஸதாசார்யத்துறையில் படிந்து குடைந்தாடுவதும் தெரிவிக்கப்படுகிறது. அதற்கும் அநுகுணமாகவேயன்றோ பதப்ரயோகங்கள் அற்புதமாக அமைந்துள்ளன.

## — ஆண்டாளுடைய நிஷ்டையின் நிருபணம் —

ஆண்டாள் நாச்சியார் திருமொழியில் உபாயங்களில் தலையானதை இரண்டு பாசுரங்களினால் நன்கு காட்டியுள்ளாள்: * கொல்லை யரக்கியை மூக்கரிந்திட்ட

குமரனுர் சொல்லும் பொய்யானுல், நானும் பிறந்தமை பொய்யன்றே • என்பது ஒரு பாசுரம். • நல்லவென் தோழி! நாகணைமிசை நம்பரர், செல்வர் பெரியர் சிறுமானிடவர் நாம் செய்வதென்? வில்லிபுதுவை விட்டுசித்தர் தங்கள் தேவரை, வல்லபரிசு வருவிப்பரேல் அது காண்டுமே • என்பது மற்ருெருபாசுரம். இவ்விரண்டு பாசுரங்களினுலும் ஆண்டாள் தனக்கு ஆசாரியன் வழியாகவே பேறு என்னுமிடத்தை அறுதியிட்டிருக்கின்ருன். கொல்லியரக்கியை மூக்கரிந்திட்ட குமரனுர் சக்ரவர்த்தி திருமகனுர்; அவருடைய சொல்லாவது • நத்யஜேயம் கதஞ்சந * இத்யாதிகள்; அவைபொய்யானுலுங் கூட, [நானும் பிறந்தமை பொய்யன்றே] நான் பெரியாழ்வார் வயிற்றிற் பிறந்தது பொய்யன்றே, எனக்குண்டான ஆசார்யஸம்பந்தம் பழுதாய் விடுமோ? ஒருகாலுமாகாது என்றபடி. இனி, "வில்லிபுதுவைவிட்டுசித்தர் தங்கள் தேவரை வல்லபரிசு வருவிப்பரேல் அது காண்டுமே" என்ற பாசுரம் ஸ்ரீவசநபூஷணத்தின் முடிவில் ஆசார்யநிஷ்டைக்குச் சார்பாக உதாஹரிக்கப் பட்டுள்ளது. அங்கு மணவாள மாமுனிகளின் வியாக்கியானம் ஸேவிப்பது ஆகவிப்படி ஆண்டாள் கடைப்பிடித்த சரமோபாயத்தையே திருப்பாவையில் உயிர்நிலையான பொருளாக வைத்துப் பேசுகிருள். அதற்கு ஸூசகம் மார்க்க சீர்ஷ பதபர்யாயமான மார்கழி என்னும் முதற்சொல்.

### — மார்க்க-சீர்ஷ என்று பிரிப்பதன் பொருத்தம் —

வாஸுதேவ சப்தத்திற்கு தத்தித வ்ருத்தியாலே வஸுதேவாத்மஜனென்னும் பொருள் தேறியிருக்கவும் பட்டர் வாஸு, தேவ: என்கிற பதங்களுக்கு ஸமாஸமாகவுங் கொண்டு பாஷ்யமிட்டதுபோல, இங்கும், மார்க்க—சீர்ஷ என்கிற பதங்களுக்கு ஸமாஸமாகக் கொள்வதில் குறையொன்றுமில்லை யென்க.

---

ஆழ்வாரெம்பெருமானுர் ஜீயர் திருவடிகளே சரணம்

# திருவத்யயநோத்ஸவச் சிறப்பு

வெண்பா

திருவத் யயனமெனும் சீர்மைமிகு நன்னுள்
பெருமைதனைப் பேசப் புகுவான்—திருமகள்கோன்
வண்ணங்க ளெல்லாம் வகுத்துரைக்கு நாவீறன்
அண்ணங்க ராசாரி யன்.

ஸ்ரீவைஷ்ணவ தேவாலயங்களுக்கு அஸாதாரணமாய் ஆச்சரியமாக அனுபவிக்கப்பட்டு வருமதான மஹோத்ஸவம் திருவத்யயநோத்ஸவமென்பது. இது பகற்பத்து. இராப்பத்து எனவும் வழங்கப்பெறும். இம்மஹோத்ஸவத்திற்கு வாய்த்த காலம் மார்கழி மாதத்து சுக்லபக்ஷ ஏகாதசிக்கு (அதாவது வைகுண்ட

ஏகாதசிக்கு) முன் பத்து நாட்களும் பின் பத்து நாட்களும், விஷ்ணுவாலயங்கள் தோறும் பெரும்பாலும் நடைபெற்று வருமிந்த மஹோத்ஸவத்தை உலகமெல்லாம் கட் கூடாக அனுபவித்து வருவதால் இதன் சிறப்பைப் புதிதாக நாம் தெரிவிக்க வேண்டுவதில்லை. ஆனாலும், இம்மஹோத்ஸவம் எதற்காக ஏற்பட்டது? எப்போது ஏற்பட்டது? யார் ஏற்படுத்தியது? இத்யாதி விஷயங்களில் பலர்க்கு ஜிஜ்ஞாஸை யிருக்கு மாதலால் அதுபற்றி இங்குச் சிறிது விவரிக்க விரும்புகிறேன்.

"ஸகல மதங்களிலும் பக்தர்கள் தம் தமக்குவாய்த்த பாஷைகளில் தோத்தி ரங்கள் இயற்றியுள்ளார்கள்; வைணவ மதத்தில் ஆழ்வார்கள் என்கிற பக்தர்கள் பாடியுள்ளார்கள்; பக்தி நூல்களெல்லாம் சமமானவையே" என்று சொல்லிப்போரு மவர்களின் சொலவுக்கு இடமறும்படி செய்து ஸ்ரீவைஷ்ணவப் பேராசிரியர்கள் ஆயிரமாண்டுகட்கு மேற்பட்ட முற்காலத்திலேயே ஆழ்வார்களின் திவ்யப் பிரபந்தங்களுக்குச் செய்துவைத்திருக்கும் சிறப்புகளை இதனால் உலகமுணர வேண் டுவது முக்கியம். இந்த மஹோத்ஸவம் முதன் முதலாக, திருவரங்கம் பெரிய கோயிலென்றும் நம்பெருமாள் ஸன்னிதி யென்றும் வழங்கப்பட்டு வருகிற ஸ்ரீரங்கத் கத்தில் தொடக்கமாயிற்று என்பதை விவரிக்கக் காண்மின். ஆழ்வார்களின் வரிசையில் அந்தத்திலே நிற்பவரான திருமங்கையாழ்வார் பாசுரங்களருளிச் செய்து கொண்டே திவ்யதேச யாத்திரையாக எழுந்தருளுங்காலத்திலே சோழநாட்டுத் திருப்பதிகளை யெல்லாம் மங்களாசாஸனம் செய்து முடித்துத் திருவரங்கம் பெரிய கோயிலுக்கெழுந்தருள வேணுமென்றிருக்கையில் திருப்புள்ளம் பூதங்குடி ஸமீபத் தில் எழுந்தருளியிருக்கும்போது ஸ்ரீரங்கநாதன் ஆழ்வாருடைய கனவிலே காட்சி தந்து உடனே ஸ்ரீரங்கம் வந்துசேர்ந்து ப்ராகார கோபுரமண்டபாதி நிர்மாண கைங் கர்யத்தை நிறைவேற்றவேணு மென்று நியமித்தருள, அந்த நியமனத்தை சிரஸா வஹித்த ஆழ்வார் கூந்தல்கமழுங் கூடலூரிலிருந்து புறப்பட்டுக் கனவேகமாகத் திருவரங்கப்பதியை நோக்கிச் செல்லுகையில் திருவெள்ளறை ப்ராப்தமாக அங்கு ஸ்ரீச்வேதாத்ரிநாதனை மங்களாசாஸனம் செய்துவிட்டு ஸ்ரீரங்கம் சென்று சேர்ந் தார். அரங்கன் நியமித்த கைங்கரியத்தை நிறைவேற்றிவிட்டே மேற்கொண்டு பாசுரங்கள் பாடுவதென்று ஓலைச்சுவடியைக் கட்டிவைத்திட்டு ப்ராகாரமண்டபாதி நிர்மாணத்தை நிறைவேற்றினர். "ரங்கபுரே மணிமண்டபவப்ரகணுந் விததே பரகால கவி:" என்று பட்டர் முத்திரையிட்டருளினபடியாலே இது நிர்விவாதம் அப்போது கோபுரப்ராகாராதி திருப்பணிகளைக்கண்டு திருவுள்ளமுகந்தருளின ரங்கநாதன் ஆழ் வார்க்குச் சில ஸத்கார விசேஷங்களைச் செய்ய மநோரதித்திருக்கையில் 'இன்ன மும் சில கைங்கரியங்கள் இங்கு ஸாவசேஷமாயிருக்கையாலே அடியேன் திவ்ய தேசயாத்திரையைப் பரிபூர்த்திசெய்துகொண்டு இவ்விடம் விடைகொள்ளுகிறேன்' என்று விஜ்ஞாபித்து நியமனம் பெற்று அங்குநின்றும் புறப்பட்டு அப்பக்குடத்தான் ஸன்னிதி வழியாக நாதன்கோவில் திருவிண்ணகர் திருநறையூர் திருச்சேறை திரு வழுந்தூர் சிறுபுலியூர் திருக்கண்ணமங்கை திருக்கண்ணபுரம் திருக்கண்ணங்குடி திருநாகை ஆகிய சோழநாட்டுத் திருப்பதிகளில் சேவித்திருந்தவற்றை மங்களா சாஸனம்பண்ணித் தலைக்கட்டிப் பாண்டிநாடு மலைநாடுகளிலும் சில ஸேவித்து திவ்

வியப்பிரபந்தங்களையெல்லாம் தலைகட்டி, சரமப்பிரபந்தமான திருநெடுந்தாண்டகத்தின் இறுதிப்பகுதியில் *பொருகயல் கண்ணீரரும்பப் புலவிதந்து புனலரங்கமூரென்று போயினரே* *பொன்னலர்ந்த நறுஞ் செருந்திப்பொழிலினூடே புனலரங்கமூரென்று போயினரே* என்னும் பாசுரங்களினால் அரங்கநாதன் மீண்டும் தம்மையழைக்கிறபடியை ஸூசிப்பித்து அங்கேற விடைகொண்டு அரங்கன் திருமுன்பே 'நாயந்தே! நாயந்தே! என்று ப்ரஹ்வாஞ்ஜலியுடராய்நிற்க, பெரியபெருமாள் இவர்க்கு விலக்ஷண ஸத்கார விசேஷங்கள் செய்தருள மநோரதித்திருந்தது கண்டு ஆழ்வார் விஜ்ஞாபித்தார்—"அடியேனுடைய சில ப்ரார்த்தனைகளைத் திருச்செவி சாத்தியருளித் தலைக்கட்டுவதே அடியேனுக்கு ஸத்காரமாகும்; நம்மாழ்வாரருளிச்செய்த திருவாய்மொழிக்கு வேதஸாம்யம் தந்தருளவேணும்: அடியேனைப்போன்ற பக்தர்கள் [ஆழ்வார்கள்] பாடியுள்ள பாடல்களையெல்லாம் பெரிய திருவோலக்கமாக விருந்து திருச்செவி சாத்தியருளவேணும்; நம்மாழ்வார் அவாவற்று வீடுபெற்றது மார்கழித்திங்களில் சுக்லைகாதசியன்றாகையாலே அதற்கு முன்னே பத்துநாளும், அந்நாள் முதலாகப் பத்துநாளுமாகச் சிறிய திருவத்யயநோத்ஸவமும் பெரிய திருவத்யயநோத்ஸவமும்கண்டருளி அடியார்கள்குழாங்களை ஆனந்தவமுதக்கடலிலே அமிழச்செய்தருளவேணுமென்பது அடியேனுடைய ப்ரார்த்தனை. இதைத்தலைக்கட்டியருள்வதே அடியேனுக்குச் செய்தருளும் ஸத்காரமாகும்"—என்று. இவ்வளவும்கேட்ட பெரியபெருமாள் 'ஆழ்வீர்! திருவாய்மொழிக்கு வேதஸாம்யமன்றோ நீர்கேட்பது; வேதத்திற்காட்டிலும் ஆதிக்யமும் நாம்தந்தோம்; வேதத்திற்கு அங்கோபாங்கங்கள்போலே திருவாய்மொழிக்கு அங்கோபாங்கங்களாயமைந்த மற்றுள்ள திவ்யப்ரபந்தங்களுக்கு வேதஸாம்யம் தந்தோம். மற்றும் நீர் விரும்பினதெல்லாம் அங்ஙனமேயாகும்' என்று திருவுள்ளமுவந்து பணித்தபடி. இந்த ப்ரார்த்தனையும் கட்டளையும் அப்போது எந்தவிதமாக நிறைவேறிற்றென்பது காலப்பழமையாலே தெரிந்துகொள்ள முடியாமலிருக்கின்றது. இடையில் திவ்வியப்பிரபந்தங்களும் மலினமாய்ப் போயின; நாதமுனிகளின் காலத்திற்குப்பின் ஸகலமும் ஸுபரிஷ்க்ருதமாய் ஸுபிக்ஷமாயிற்று.

கலியுகத்தில் நம்மாழ்வார்க்குமுன்பு திருநாடு செல்வார் யாருமில்லாமையாலே வைகுந்த நீள்வாசற்கதவு மூடப்பட்டேயிருந்து ஆழ்வார் அவாவற்று வீடு பெற்றவன்றே அது திறக்கப்பட்டதென்னு மைதிஹ்யத்தை நினைப்பூட்டவே வைகுண்டைகாதசியன்று பரமபதவாசல் திறப்பதென்கிற ஸம்ப்ரதாயம்நிகழ்வதாம். நம்மாழ்வார் வைகுந்தம் புக்க ஏகாதசியென்கிற காரணம்பற்றி வைகுண்டைகாதசியென்று இந்த நன்னாள் வழங்கப்பெற்றது. ... ... ... •

நிகமாந்த குருவரர்தாம் பணித்த குருபரம்பராஸாரமென்னும் ரஹஸ்யத்தில் ஸ்ரீமந்நாத முனிகளைப்பற்றி ப்ரஸ்தாவித்து வருகையில் "இவர்க்கு யோகதசையிலே ஸாக்ஷாத்க்ருதராய் நம்மாழ்வார் ஆசார்யரானார்" என்றருளிச் செய்திருக்கையாலே நாதமுனிகள் நம்மாழ்வார் திருவாக்காலே நாலாயிர திவ்யப்ரபந்தங்களைப்பெற்று ப்ரசாரம் செய்தருளினரென்பது ஸ்பஷ்டமாகத் தெரிகின்றது. நாத முனிகளுக்கு பாகிநேயர்களிருவர். அவர்களது திருநாமம் கீழையகத்தாழ்வார், மேலையகத்தாழ்வார் என்பதாம். அவர்களிருவரும் குசலவர்கள் போலே ஸங்கீதகலாப்ரவீணர்

களாய் தேவகான நிபுணர்களாயிருந்தபடியாலே அவர்கள் தமது மாதுலரான நாதமுனிகள் பக்கலிலிருந்து பெற்ற திவ்ய ப்ரபந்தங்களை பகவதாஜ்ஞையாலும் நாதமுனிகளின் நியமனத்தினாலும் தாளத்துடன் திருவரங்கேசன் திருமுன்பே ஸேவிக்கத் தொடங்கினார்கள். மேலே பரஸ்தாவித்த குருபரம்பராஸார ரஹஸ்யத்தின் முடிவில் "காளம் வலம்புரியன்ன நற்காதலடியவர்க்குத், தாளம் வழங்கித் தமிழ் மறையின்னிசை தந்த வள்ளல், மூனும் தவநெறி மூட்டிய நாதமுனிகழலே, நாளுந் தொழுதெழுவோம் நமக்கார் நிகர் நானிலத்தே." என்றிட்ட பாட்டினால் இந்த விஷயம் வியக்தமாகவிளங்கும்.

தாளவிசையோடு செய்யத் தொடங்கிய அந்த தேவகானந்தான் 'அரையர் ஸேவை' என்று இன்றைக்கும் பேர்பெற்று வருகின்றது. அக்காலத்தில் ஸ்ரீரங்கத்தில் மட்டுமன்றிக்கே மற்றுஞ்சில திருப்பதிகளிலும் (ஸ்ரீவில்லிபுத்தூர், ஆழ்வார் திருநகரி, திருக்குறுங்குடி முதலானவற்றிலும்) அரையர்கானம் நடைபெற்று வந்தது; இது இன்றைக்குங் காண்கிறது. அரையரென்னுந் திருநாமம் பூண்ட இசைகாரர்கள் ஆளவந்தார் காலத்திலேயே யிருந்து வந்ததாக நூல்களில் நன்கு காண்கிறோம்; பஞ்சாசார்ய பதாச்ரிதரான எம்பெருமானாருடைய ஆசாரியர்கள் ஐவரில் ஒருவர் அரையர், அவரே மேலே ப்ரஸ்தாவித்த குருபரம்பராஸாரத்தில் 'ஆளவந்தாராழ்வார்' என்று வ்யபதேசிக்கப்பட்டவர், "எம்பெருமானார்.. ஆளவந்தாராழ்வார் ஸ்ரீ பாதத்திலே திருவாய்மொழியுமோதி ஸ்தோத்ராதிகளும் அருளிச் செய்யும் நல்வார்த்தைகளும் கேட்டருளினார்" என்பது அவ்விடத்தில் நிகமாந்த குருபணித்த ஸூக்தி. திருவரங்கப் பெருமாளரையர், வரந்தரும் பெருமாளரையர், பிள்ளை திருநறையூரரையர்....இத்யாதிகளான அரையர் திருநாமங்களை ஆளவந்தார் காலத்திலும் எம்பெருமானார் காலத்திலும் பரவியிருக்கக் காண்கிறோம். திருவத்யயநோத்ஸவத்தில் அரையர்கள் இப்போதுபோல் அப்போதும் அபிநயங்கள் செய்துவந்தார்களென்பதை திவ்யப்ரபந்த வியாக்கியானங்களில் ஸ்பஷ்டமாகக் காண்கிறோம். அந்த அபிநயங்களை எம்பெருமானார் எம்பார் முதலான பேராசிரியர்கள் திருவோலக்கத்திலிருந்துகொண்டு அநுபவித்ததையும் பெரியாழ்வார் திருமொழி பெருமாள் திருமொழிவியாக்கியானம் முதலானவற்றில் காண்கிறோம். கோயிலில் அரையர்களுக்கு ஏற்பட்டிருக்கும் கௌரவமும் பஹுமான விசேஷங்களும் அப்ரமேயம். பகற்பத்திலும் இராப்பத்திலும் மூன்று நாள் அரையர்கள் திருக்கையிலே அர்ச்சகர்கள் ஸ்ரீசடகோபனைத்தந்து கோஷ்டிக்குப்ரஸாதிக்கும்படியான பெருமையையும், சில நாட்களில் தீர்த்தமும் ப்ரஸாதிக்கும்படியான பெருமையையும் கட்கூடாகக் கண்டு வருகிறோம். இதெல்லாம் ராமாநுஜார்ய திவ்யாஜ்ஞையினாலன்றி மற்றபடி ஸாமான்ய புருஷர்களின் ஏற்பாட்டினால் நடைபெறக்கூடியதன்று.

பகற்பத்திலும் இராப்பத்திலும் மூவாயிரம் பாசுரங்களை அரையர்கள் ஸேவித்துவருவதென்றும், இருபத்தோராநாளில் திருவரங்கத்தமுதனாருடைய திருவம்சஸ்தர் பெரியபெருமாளுடைய ஆஸ்தானத் திருவோலக்கத்திலே இயற்பா ஆயிரத்தையும் ஸேவித்து வருவதென்றும் அன்றுதோன்றின திவ்யாஜ்ஞை பொலிக பொலிகவென்று காப்பிடக்கூடிய நிலையிலன்றோ திகழ்ந்து வருகின்றது. திருவரங்

கத்தமுதனாருடைய திருவம்சஸ்தர் ஒருவரிருவரிருத்தும் கைங்கரியத்தில் ச்ரத்தை கொள்ளாமையினாலே மூன்று வருஷகாலமாக இயற்பா ஸேவையையும் அரையர் ஸ்வாமியே உலகம் மெச்ச நடத்தி வருகிறார்.

இந்தத் திருவத்யயன மஹோத்ஸவம் முதன் முதலாகத் திருமங்கையாழ்வாரால் திருவரங்கம் பெரிய கோயிலில் தொடங்கப்பட்டதென்றும், அப்போது நம்மாழ்வாரொருவர்மட்டுமே ஆழ்வார் திருநகரியிலிருந்து எழுந்தருளச் செய்யப்பட்டு நடந்ததென்றும், ஸ்ரீமந்நாதமுனிகள் காலத்திலும் அவ்வண்ணமாகவே நடந்து வந்ததென்றும், பிறகு ஆழ்வார்களினுடைய திவ்ய மங்களவிக்ரஹப்ரதிஷ்டை கோயிலில் ஏற்பட்டு ஆழ்வார்களெல்லாரு மெழுந்தருளியிருந்து நடந்து வந்ததென்றும், நாளடைவில் ஆசாரியர்களின் திவ்யமங்கள விக்ரஹப்ரதிஷ்டையுமாகி, இந்த பத்ததி ஸகலதிவ்ய தேசங்களிலும் வியாபித்து «கண்டோங்கண்டோங் கண்டோம் கண்ணுக்கினியன கண்டோம், தொண்டீரெல்லீரும் வாரீர் தொழுது தொழுதுநின்றார்த்தும்» என்னும்படியாக நிகழ்ந்து வருகின்றதென்றும் பெரியார் பணித்தருளும் ப்ரக்ரியை.

நமக்கு ஸந்நிஹிதமான தேவப்பெருமாள் ஸன்னிதி, ஸ்ரீபார்த்தஸாரதி ஸன்னிதி, எம்பெருமானார் ஸன்னிதி முதலான திருத்தலங்களில் இந்த மஹோத்ஸவம் சிறப்புற நடந்துவரும் வைகரியை அநுபவித்து ஆனந்தித்து வருகிறோம். ... *

---

ஸ்ரீ:

## எம்பெருமானாருடைய ஆசாரியர்கள்.

---

வடுகநம்பி எம்பெருமானார்க்கு இட்ட திருநாமமாலையில் "பஞ்சாசார்ய பதாச்ரித:" என்பதும் ஒரு திருநாமமாக வுள்ளது. ஐந்து ஆசாரியர்களை அடிபணிந்தவர் எம்பெருமானார் என்று ப்ரஸித்தமாகச் சொல்லப்படும் விஷயமிது. அவ்வாசாரியர்கள் ஐவரை இன்னாரின்னாரென்று முன்னோர்கள் தமது திவ்யக்ரந்தங்களில் குறிப்பிட்டுள்ளார்கள். அந்த க்ரந்தங்களுக்குள் ஸ்ரீமந்நிகமாந்த மஹாகுருவின் க்ரந்தத்தை இங்கு எடுத்துக்கொள்வோம். அவ்வாசிரியர் பணித்த ரஹஸ்யக்ரந்தங்களுள் குருபரம்பரா ஸாரமென்பது ஒன்று. அதில்

"இவ்வாசாரியர்களில் ஈச்வரமுனிகள் பிள்ளை நாதமுனிகள்"

என்று தொடங்கி யருளிச்செய்து வருகையில்,

"பெரியநம்பி ஸ்ரீ பாதத்தை ஆச்ரயித்தவர்கள் அறுவர்; அவர்களாகிறார்— எம்பெருமானார், மலைகுனிய நின்றார், ஆர்ய ஸ்ரீ சடகோபதாஸர், அணியரங்கத்தமுதனார், திருவாய்க் குலமுடையான் பட்டர், திருக்கச்சிநம்பி"

என்றருளிச் செய்துவிட்டு, அதன்பிறகு,

"எம்பெருமானார் திருக்கோட்டியூர் நம்பி ஸ்ரீபாதத்திலே ரஹஸ்யார்த்தங்கள் சிக்ஷித்தார்; திருமாலையாண்டான் ஸ்ரீபாதத்திலே திருவாய்மொழிக்கு அர்த்தம்

ஸ்ரீ—2

கேட்டருளினர்; ஆளவந்தாராழ்வார் ஸ்ரீ பாதத்திலே திருவாய்மொழியுமோதி ஸ்தோத்ராதிகளும் அருளிச்செய்யும் நல்வார்த்தைகளும் கேட்டருளினர் திருமலை நம்பி ஸ்ரீபாதத்திலே ஸ்ரீமத் ராமாயணம் கேட்டருளினர்,''

என்றருளிச்செய்து தலைக்கட்டினர். ஆக இந்த ஸ்ரீஸூக்திகளினல் ஸ்வாமி யெம்பெருமானர்க்கு ப்ரதாநாசார்யர் பெரியநம்பி யென்று விளங்கிற்று.

தேசிகன் தாமே முதல்ரஹஸ்யமான ஸம்ப்ரதாய பரிசுத்தியில்—

''ஆளவந்தாருடைய நியோகத்தாலே ஸ்ரீ பாஷ்யகாரரை அங்கீகரித்த பூர்ணரான பெரியநம்பி இவரைத் தமக்கு ஸப்ரஹ்ம சாரிகளான திருக்கோட்டியூர் நம்பி பக்கலிலே அர்த்தசிக்ஷை பண்ணவும், திருமாலையாண்டான் பக்கலிலே திருவாய்மொழி கேட்கவும், ஆழ்வார் திருவரங்கப் பெருமாளரையர் பக்கலிலே நல்வார்த்தை கேட்கவும் நியோகித்ததும்''

என்றருளிச் செய்திருப்பதும் குறிக்கொள்ளத்தக்கது. ஸ்ரீவசனபூஷணத்தில்— ''நேரே ஆசார்யனென்பது ஸம்ஸார நிவர்த்தகமான பெரிய திருமந்த்ரத்தையுபதேசித்தவனை'' என்றருளிச் செய்துள்ளபடி எம்பெருமானர்க்கு ப்ரதாநாசாரியர் பெரியநம்பிகளென்று கீழே யுதாஹரித்த ஸ்ரீ தேசிக ஸூக்திகளால் நன்கு விளங்கா நின்றது. இவ்விஷயத்தை மற்றும் பலபல ப்ரமாணங்களினல் நிலைநாட்டுகிறோம்.

ஸ்ரீவைஷ்ணவ ஸம்பிரதாயத்தில் ஓராண்வழி குருபரம்பராக்ரம மென்பது எங்கும் ஸமரீதியாக அநுஸந்தானத்திலுள்ளது. இதில் வாக்ய குருபரம்பரை யென்றும் ச்லோக குருபரம்பரை யென்றும் இரண்டு ப்ரகாரமுள்ளது. வாக்ய குருபரம்பரையில் முதல் மூன்று வாக்கியங்கள் ''அஸ்மத் குருப்யோ நம:'' இத்யாதிகள். இவை கிலருக்குக்களாம். இதற்குமேல் ''ஸ்ரீமதே ராமாநுஜாய நம:'' என்று தொடங்கி (ஸ்ரீதராய நம:) என்று தலைக்கட்டும் வாக்யராசியில் ஸ்ரீராமாநுஜருடைய ஸாக்ஷாதாசார்யராகப் பெரியநம்பியே குறிப்பிடப்பட்டுள்ளார். அவருடைய இயற்கைத் திருநாமம் பராங்குசதாஸரென்பது. வாக்ய குருபரம்பரைக்கு அடுத்தபடியாக அநுஸந்திக்கப்படுகிற ச்லோக குருபரம்பரையில் ''அஸ்மத்தேசிகம் அஸ்மதீய பரமாசார்யாந் அசேஷாந் குருந் ஸ்ரீமல்லக்ஷ்மண யோகிபுங்கவ மஹாபூர்ணௌ முநிம் யாமுநம்'' என்றுள்ளதையும் குறிக்கொள்ள வேணும். இதில் லக்ஷ்மண யோகி புங்கவராக நிர்தேசிக்கப்பட்டவர் எம்பெருமானர்; அவருடைய ஆசார்யர் 'மஹாபூர்ணர்' என்று ஸ்பஷ்டமாக நிர்தேசிக்கப்பட்டுள்ளார். பெரிய நம்பி யென்பதற்கு நேரான வடமொழிப் பெயர் மஹாபூர்ண: என்பது.

பட்டர் பகவத்குண தர்ப்பண மென்கிற ஸஹஸ்ரநாம பாஷ்யத்தின் முகப்பில் ஸ்வாசார்யர் தொடங்கி எம்பெருமானளவும் இடையில் ஒரு வ்யக்தியையும் விடாமல் குருபரம்பராநுஸந்தானத்தை ச்லோகமாக நிபந்தித்துள்ளார்; அந்த சுலோகம் வருமாறு—

''வந்தே கோவிந்ததாதௌ முநிமத மநவை லக்ஷ்மணார்யம் மஹாந்தம்
த்யாயேயம் யாமுநார்யம் மம ஹ்ருதி தநவை ராம மேவாபியாயாம்,
பத்மாக்ஷம் ப்ரேக்ஷிஷீய ப்ரதமமபி முநிம் நாதமீடே சடாரிம்
ஸ்தௌமி, ப்ரேக்ஷேய லக்ஷ்மீம் சரணமச்ரண: ஸ்ரீதரம் ஸம்சரயேயம்''

என்பதாம். பட்டர்க்கு ஸாக்ஷாதாசாரியர் எம்பார். உபகாரகாசார்யர் (திருத்தந்தை யாரான) ஆழ்வான் இவ்விருவரையும் (கோவிந்த தாதௌ) என்று நிர்தேசித்து, ததாசார்யரான எம்பெருமானரை லக்ஷ்மணார்ய மென்று நிர்த்தேசித்து, அவர் தம்மு டைய ஆசார்யரை (மஹார்நம்) என்று நிர்தேசித்தருளினர். அவர்தாம் பெரியநம்பி.

யதிராஜஸப்ததி யருளிச்செய்யாநின்ற தேசிகன் பெரியபெருமாள் தொடங்கி குருபரம்பராநுஸந்தான பூர்வகமாக எம்பெருமானரிடம் வருகிருர். (கமப்யாத்யம் குரும் வந்தே) என்று ப்ரதமாசார்யனுன எம்பெருமாளில் உபக்ரமம். பிறகு, பெரிய பிராட்டியார், ஸேனை முதலியார், நம்மாழ்வார், நாதமுனிகள். உய்யக்கொண்டார், மணக்கால்நம்பி, ஆளவந்தார் ஆகிய இவர்களை ஒவ்வொரு சுலோகத்தினல் துதித்து, பிறகு உடையவருடைய ஸாக்ஷாதாசார்யரை "தயாநிக்நம் யதீந்த்ரஸ்ய தேசிகம் பூர்ணமாச்ரயே" என்கிற சுலோகத்தினுல் உபச்லோகித் துள்ளார். இதில் பூர்ணரென்னப்பட்டவர் பெரிய நம்பியே யாவர்.

தேவப்பெருமாள் திருக்கச்சி நம்பி மூலமாக ஸ்வாமி யெம்பெருமானர்க்கு ஆறுவார்த்தை யருளிச்செய்தது ஸுப்ரஸித்தம். அது "அஹமேவ பரம் தத்வம்" இத்யாதி ச்லோகத்தினுல் விசதம். அதில் "பூர்ணுசார்ய ஸமாச்ரய:" என்றுள் ளது, பெரிய நம்பியை ஆச்ரயிப்பதென்று பேரருளாளன் நியமித்தருளினபடி. ஸ்வாமி ஆளவந்தார் திருவடிகளை ஆச்ரயிக்கப் பாரித்திருந்தார். அது வாய்க்கப் பெறவில்லை. திருக்கச்சிநம்பி திருவடிகளில் ஆச்ரயிக்கலாமென்று ஆலோசித் திருந்தார். இது ஸர்வாத்மநா கூடாதென்று மறுத்துவிட்டாரவர். பிறகு திருவுள் ளத்தில் கனத்தவிசாரம் ஓடியிருந்தது. திருக்கச்சிநம்பி யாறுவார்த்தைகளில் ஸ்வாமிக்கு மிக முக்கியமான வார்த்தை இதுவேயாகும். இதன்படியே நடைபெற் றமை ஜகத் ப்ரஸித்தம்.

வடிவழகிய நம்பிதாஸரென்கிற புராதன பக்தமகாகவி தாம் செய்யுள் மாலை யாகப் பாடிய எம்பெருமானர் வைபவத்தில், சுலோகருபமாக நாம்அநுஸந்தித்து வரும் ஆறுவார்த்தைகளைச் செய்யுளாக்கி யுள்ளார், (இரண்டு செய்யுள் வருமாறு—)

"செப்புகின்ற பரதத்வம் யானேயென்னச் செப்புதி,வே
ரெப்பிலாதாய்! தரிசனமும் பேதமென்றே யுரைத்திடுக
அப்ப! புகல்க இவையன்றி நினைவும்வேண்டா அந்திமத்தில்
தப்பிலாத வுபாயமதும் ப்ரபத்தியென்றே சாற்றிடுக.

இந்தச்சரீர அவசானந் தன்னிலிசையும் மோக்கமது
அந்தமில்லாக் குணத்தினனுக் காசாரியனும் பெரியநம்பி
சிந்தைதன்னு ளிவையெல்லாம் சிந்தித்திருந்தா னிளையாழ்வான்
முந்தி யிவைநீ மொழியென்று மொழிந்துநின்ற னருளாளன்."

இச் செய்யுள்களின் பொருள் மிகவெளிதே. ஸ்வாமி எம்பெருமானரருளிச்செய்த பெரியநம்பி தனியன்—"கமலாபதி கல்யாண குணம்ருத நிஷேவயா, பூர்ணகாமாய ஸததம் பூர்ணய மஹதே நம:" என்பது. ஸ்ரீவைஷ்ணவஸம்ப்ரதாயத்தில் அன்று தொட்டு இன்றளவாக விப்ரதிபத்தியோ விவாதமோ விளைந்ததில்லை. இப்போது

நாம் இதைப்பற்றி இங்கு இவ்வளவு விளக்க விரிவு கொள்ளவேண்டிய காரண மென்னென்னில்;

ஸ்ரீராமாநுஜன் சென்றவிதழில்—ஸ்ரீகாஞ்சியில் ஸ்ரீதாததேசிகன் நானூருண்டு நிறைவுவிழாச் சிறப்பு நடைபெற்றதை வெளியிட்டிருந்தோம். அதற்கு நினைவு மலரொன்று வெளியிடப்பட்டிருப்பதையும் ஓரிடத்தில் ப்ராஸங்கிகமாகக் குறிப்பிட்டிருக்கிறோம். அந்த மலரில் ஒரு பண்டிதர் திருமலைநம்பிகளைப் பற்றி யெழுதி வெளியிட்டுள்ள ஆங்கிலக் கட்டுரையில் உடையவர்க்குத் திருவிலச்சினை ஸாதித்தவர் திருமலை நம்பியே யென்று வரைந்திருப்பது கண்டோம், இஃது அபூர்வமும் அப்ரமாணமுமான ப்ரஸ்தாவமென்பதை உலகுக்கு உணர்த்த வேண்டியது மிகவும் ஆவச்யகம் என்று தோன்றிற்று. ஆயிரம் ஸம்வத்ஸர காலமாக உலகமறியாத வொரு விஷயத்தை இன்று ப்ரஸங்கிப்பது "ந புத்திபேதம் ஜநயேத்" என்கிற கீதையின் நீதிக்கு ஒவ்வாததன்றோ. திருமலை நம்பி பக்கலிலே யாருக்கும் வித்வேஷமோ மாச்சரியமோ கிடையாது. ஸ்ரீராமாயண பாராயணம் செய்யும் ஸ்ரீவைஷ்ணவ வுலகமெல்லாம் "பிதாமஹஸ்யாபி பிதாமஹாய ப்ராசேதஸாதேச பலப்ரதாய, ஸ்ரீபாஷ்யகாரோத்தம தேசிகாய ஸ்ரீசைலபூர்ணாய நமோ நமஸ்தாத்." என்னும் திருமலைநம்பியின் தனியனை பக்திச்ரத்தையோடு அநுஸந்தித்தே வருகின்றது. இராமாநுச நூற்றந்தாதியில் • படிகொண்ட கீர்த்தியிராமாயண மென்னும் பத்தி வெள்ளங் குடிகொண்ட கோயிலிராமானுசன் • என்று போற்றப்பட்ட ஸ்வாமி யெம்பெருமானார் ஒரு ஸம்வத்ஸரம் திருப்பதியில் மாதுலஸகாசத்திலெழுந்தருளி யிருந்து ஸ்ரீராமாயண விசேஷார்த்தங்களை க்ரஹித்தருளின பெருமையை உலகம் புகழாமையில்லை. எவரெவர்க்குப் ப்ராமாணிகமாக எவ்வளவு பெருமையுள்ளதோ அவரவர் விஷயத்தில் அவ்வளவில் த்ருப்தி பெறவேண்டியது ப்ராப்தம்

இதற்குமேல், பகவத் பாஷ்யகாரருக்கு பரந்யாஸமும் திருமலைநம்பியிடத்தே யாயிற்றென்பது ஒரு கூற்று அல்லது கூத்து. நூற்றைம்பது வருடங்களுக்கிப்பால் தோன்றியதும் பூர்வாசார்ய க்ரந்தங்களிலும் ப்ரஸ்தாவிக்கப்படாததுமான பரந்யாஸமென்பதொன்று மேலே ப்ரஸ்தாவித்த ஆங்கிலக் கட்டுரையில் புகுத்தப்பட்டிருப்பது ஓர் அதிசயமான விஷயம். ஸ்ரீதேசிகன் மட்டுமன்றிக்கே அவர்க்கு முந்தினவர்களும் பிந்தினவர்களுமான க்ரந்த கர்த்தாக்கள் யாவரும் இன்னார் இன்னாரை ஆச்ரயித்தார் என்றெழுதுவது தவிர வேறொரு குறிஷ்டையையும் பிரஸங்கித்திலர். ஸ்ரீதேசிகன் ஸ்ரீமத்ரஹஸ்யத்ரயஸாரத்திலும் சரணாகதிகத்ய பாஷ்யத்திலும் விசேஷித்தருளிச்செய்திருப்பதை நோக்கினால் நூதந ப்ரஸங்கங்கள் அவகாச லேசமுமின்றிக்கே வேரறும்.

ஸ்ரீமத்ரஹஸ்யத்ரயஸாரத்தில் பதின்மூன்றுமதிகாரமான
க்ருதக்ருத்யாதிகாரத்தில்—

"அநாதிகாலம் ஆஜ்ஞாதிலங்கனமடியாக வுண்டான பகவந் நிக்ரஹத்தாலே ஸம்ஸரித்துப் போந்தவனுக்கு அவஸரப்ரதீக்ஷையான பகவத் க்ருபை யடியாகவுண்டான ஸதாசார்ய கடாக்ஷ விஷயீகாரத்தாலே வந்த த்வயோச்சாரண அநுச்சாரணத்தாலே ப்ரபத்த்யநுஷ்டானம் பிறந்தபின்பு சரண்ய ப்ரஸாதனங்களில் இதுக்குமேல் ஒன்றில்லாமையாலே நிக்ரஹஹேதுக்

களை யெல்லாம் க்ஷமித்துத் தீர்ந்த வடியவர் தம்மைத் திருத்திப் பணிகொள்ள வல்ல ஸர்வ சேஷியான ச்ரிய:பதி தன் பேருகத் தானே ரக்ஷிக்குமென்று தேறி நிர்ப்பரனாயிரு என்கை."

என்றருளிச்செய்து, இங்ஙனே தமிழிலருளிச்செய்த விதனை சரணாகதி கத்ய பாஷ்யத்தில் தாமே ஸம்ஸ்கிருதத்தில் மொழிபெயர்த்தருளியுள்ளார். அந்த ஸ்ரீஸூக்தி ரத்னங்களையுங் கேண்மின்; "அதஸ் த்வம் தவ தத்வதோ மத்ஜ்ஞாந தர்சந ப்ராப்திஷு நிஸ்ஸம்சயஸ் ஸுகமாஸ்வ" என்கிற சரணாகதிகத்ய சரம ஸ்ரீஸூக்தியை விவரித்தருளுமிடத்து,

"ஏதேந அநாதிகாலம் ஆஜ்ஞாதி லங்கநமூல பகவதப்ரஸாதேக ஸம்ஸரதோ மே பகவத்க்ருபாமூல ஸதாசார்யாங்கீகாரேண த்வயோச் சாரணாநுச்சாரண பூர்வக ஸ்வரக்ஷா பரந்யாஸே ஸித்தே ப்ரஸாதநேஷு அஸ்மாத் அப்யதிகஸ்ய அபாவாத் ஸ்வீக்ருதபர: ச்ரிய:பதிர் நாராயண: காலத்ரயவர்த்திந: ஸர்வாந் அப்ரஸாத ஹேதூந் யதார்ஹம் க்ஷாந்த்வா ஸ்வயமேவ ஸ்வார்த்தமேவ மாம் ஸ்வஜ்ஞாந தர்சத ப்ராப்த்யாதி ப்ரதாநேந ரக்ஷேதிதி விச்வஸ்த: நிர்ப்பரோ நிர்ப்பயோ பவேதி நிகமிதம் பவதி"—என்பவை.

கத்யபாஷ்யம் முன்னே யருளிச்செய்ததா? ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரம் முன்னே யருளிச்செய்ததா? என்பதை ப்ராமாணிகர்கள் நிஷ்கர்ஷிப்பது. உதாஹரித்த உபயக்ரந்த வாக்யங்கள் ஒன்றுக்கொன்று நேரான மொழிபெயர்ப்பு, என்பதில் ஸந்தேஹகந்தமுமில்லையே. ஸ்வாமி தேசிகன் இரண்டு திவ்ய க்ரந்தங்களிலும் நிஸ்ஸம்சய விபர்யயமாக அருளிச்செய்திருப்பது என்ன? ஸம்ஸாரி சேதநன் நெடுங்காலமாக பகவதாஜ்ஞையை மீறி நடந்துகொண்டு ஸம்ஸாரஸாகரத்தில் துளங்குகின்றான்; ஸ்வாபாவிக க்ருபாளுவான ஸர்வேச்வரன் இவனைக் கரைசேர்க்க அவகாசலேசமாவது கிடைக்குமோவென்று எதிர்பார்த்து வருகிறான். "தனக்கேற இடம்பெற்றவளவிலே" என்று தொடங்கி ஸ்ரீவசநபூஷணத்தி லருளிச்செய்கிறபடி யாத்ருச்சிக ஆநுஷங்கிக ப்ராஸங்கிகாதி ஸுக்ருதங்கண்டு அவகாசம் பெறுகிறான். பெற்றவாறே ஒரு ஆசார்யனை இவனுக்குக் காட்டிக் கொடுத்து அவன்மூலமாக த்வயமந்த்ரோபதேசம் பெறுவித்து இவனை க்ருதக்ருத்யனாக்குகிறான். இந்த த்வயோச்சாரண அநூச்சாரணத்துக்கு மேற்பட எம்பெருமான் திருவுள்ள முகப்பதற்கு வேறொன்றுங் கிடையாது—என்பதை ஸ்பஷ்டமாக—ஸுஸ்பஷ்டமாக ஸ்வாமி தேசிகன் வடமொழியிலும் தென்மொழியிலு மருளிச்செய்திருக்க, இதற்கு ஸர்வாத்மநா விருத்தமான ஒரு ஆசரணையை எம்பெருமானாரிடத்திலும் ஏறிடப் பார்ப்பது அத்யந்த ஸாஹஸம். மேலே உதாஹரித்த தேசிக திவ்யஸூக்தி ஸித்தமான ஓர் அனுஷ்டானத்தை அபலபிக்கும் ஸ்ரீவைஷ்ணவர் ஒருவருமில்லை. இந்த அனுஷ்டானம் ஸ்வாமி ராமாநுஜர்க்குப் பெரியநம்பி பக்கலிலேயொழியத் திருமலைநம்பி பக்கலிலே யன்று—என்பது ப்ரமாண சதங்களினால் மூதலிக்கப்பட்டதாயிற்று.

ப்ரஸ்துதமான ஆங்கிலக் கட்டுரையில் இன்னுஞ்சில பொய்யுரைகளிருந்தாலும் அவற்றை யுபேக்ஷித்து, ஸம்ப்ரதாய வ்ருத்தர்கள் அருவருக்கக் கூடியதும் முக்கியமுமான பொய்யுரையைமட்டும் இக்கட்டுரைமூலமாகக் களைந்தொழித்தோம்.

எம்பெருமானார் திருவடிகளே சரணம்.

# கண்ணனும் அண்ணனும் பேசியவை

(முன் தொடர்ச்சி)

கண்ணன்—கல்லுயர்ந்த நெடுமதிள் சூழ்கச்சிமேய அண்ணு! உன்னைத் தேடிக்கொண்டு கச்சிப்பதிக்குச் சென்றிருந்தேன்; நீ சென்னையிலிருப்பதாகவறிந்து, இதோ இங்கு வந்திருக்கிறேன்; என்ன விசேஷம் சொல்லு.

அண்ணு—கார்முகில் வண்ணு என் கண்ணு! யசோதைப்பிராட்டி உன்னை நோக்கிச் சொன்ன வார்த்தைகளில் ஒரு வார்த்தை நினைவிருக்கிறதா உனக்கு? * கண்ணு! நீ நாளைத்தொட்டுக் கன்றின்பின் போகேல் கோலஞ் செய்திங்கேயிரு * என்றுளல்லவா? அப்படி நானும் உன்னை இங்கே இரு என்கிறேன்; இருக்கிருயா?

கண்ணு—என்னெஞ்சிடங்கொண்ட அண்ணு! என்னை உனக்கே தந்த கற்பகமன்றே நான்! என்தாய் என்னை இங்கேயிரு என்று சொன்னது ஏழுநாளைக்கு மட்டுமே. "திண்ணர் வெண் சங்குடையாய்! திருநாள் திருவோண மின்றேழு நாள்" என்று சொல்லி அந்த ஏழுநாளைய மஹோத்ஸவத்திற்காக மட்டுமே இங்கே யிரு என்றுள்; நீ என்னை எத்தனை நாளிருக்கச் சொன்னுலும் இருப்பதென்கிற திட ஸங்கல்பத்தோடன்றே இன்று நான் வந்திருக்கிறேன். என்னை நீ தெய்வமாக நினைக்காமல் அந்தரங்க நேசனென்று நினை. அப்படியே நினைத்தேனென்று சொல்லு.

அண்ணு!—கள்ள மாதவா கண்ணு! இந்த உன் வார்த்தையைக் கேட்கும் போது எனக்கு ஒருபுறம் ஸந்தோஷமும் ஒரு புறம் கலவரமும் உண்டாகிறது. எதனுலென்று கேட்கிருயோ? சொல்லுகிறேன் கேள். "சீமாலிகனவனேடு தோழமைக் கொள்ளவும் வல்லாய், சாமாறவனை நீயெண்ணிச் சக்கரத்தால் தலைகொண்டாய்" என்கிற உன் சரிதையொன்றை நாள் தப்பாமல் நாடோறும் அநுஸந்தித்து வருகிறேன். நீ திருவாய்ப்பாடியில் வாழ்ந்தபோது மாலிக னென்பவனேடு தோழமை கொண்டாயாம்; தோழனுன அவனையே தலையறுத்தாயாம்; இதை நினைக்க நினைக்க அஞ்சவேண்டி யிருக்கிறதல்லவா? கண்ணு! இந்தக் கதை மெய்தானே?

கண்ணு—மெய்தானு? என்று அண்ணு! நீ கேட்கலாமா? இக்கதையை நான் மஹர்ஷிகளுக்குக் காட்டிக்கொடாமல் பெரியாழ்வா ரொருவர்க்கு மட்டுமேயன்றே காட்டிக்கொடுத்தேன். அவ்வாழ்வார்க்கு இதில் ஒரு விப்ரதிபத்தியுமுண்டாக வில்லையே. நான் செய்த அச்செயல் யுக்தந்தானென்பதை அவர் விளக்கியிருப்பது உனக்குத் தெரியாதா?

அண்ணு—பாலாலிலையில் துயில்கொண்ட கண்ணு! எனக்கு ஏன் தெரியாது? அவ்வாழ்வார் இக்கதையைச் சொன்னவுடனே "ஆமாறு அறியும் பிரானே!"

என்று சொல்லி உன் செய்கையை யுக்தமென்று ஸமர்த்தித்திருக்கிறபடியை நான் அறிந்தே யிருக்கிறேன். உன் சரிதைகளில் ஸமர்த்தனமில்லாததுமுண்டோ? தோழமைகொண்ட விடத்திலே தலையறுப்பதுமுண்டு என்றறிந்த பின் உன் தோழமைக்கு நான் எப்படி உகப்பது?

கண்ணா—கற்றுங்கல்விச்சாரமறிந்த அண்ணா! *ஜ்ஞாநீ து ஆத்மைவ மே மதம்* இத்யாதியான என்னுடைய அரிய பெரிய அருள்மொழிகளை விட்டிட்டு இந்தச் சிறு கதையைப் பற்றிக்கொண்டு ஏதோ பேசுகிறாயே, இது தகுதியன்று; இதை அறவே மறந்துவிடு. நான் காட்டின விச்வரூபங்கண்ட அர்ஜுனன் "விஹார சய்யாஸந போஜநேஷு" என்றதை அறிவாயே; அப்படியெல்லாம் அவனோடு கலந்திருந்த நான் அதற்கும் மேலாகவன்றோ உன்னோடு கலந்து களிப்பேன். இப்போதைய விசேஷத்தைச் சொல்லண்ணா!

அண்ணா—இப்போது * மார்கழித் திங்கள் மதிநிறைந்த நன்னாளென்பதறி வாயே முப்பதுந் தப்பாமே உன்சிறுச் சேவகங்களை நான் சொல்லி ஓராயிரவரை * வண்பொன்னிப் பேராறு போல் வருங்கண்ணநீர் கொண்டவர்களாக ஆக்கி வருகின்ற அதிசயத்தை நீ கண்ணாரக் காணவேண்டாமா? இன்று * வல்லானை கொன்ற கதையையும் * மாற்றாரை மாற்றழிக்கவல்ல மாயத்தையும் பேசப்போகி றேன்; அப்படி எட்டிப்பார்; எத்தனைவர் எதிர்பார்த்திருக்கிறார்களென்று பார்' எழுந்திரு; என்னோடு கூடவே நீயும் வா. "கட்கிலீயுன்னைக் காணுமாறருளாய்". என்பார்க்கு உன்னைக் காட்டிக்கொடுக்கலாகாதா? எழுந்திரு போவோம். மணி 5-55 ஆய்விட்டது கண்ணா!

கண்ணா—என்னுள்ளங்குளிருமண்ணா! நீயெழுந்து செல்; பின்னாலே வருகி றேன். தினப்படியாக நான் வந்து கேளாமலில்லை. அப்படியே இன்றும் வந்து கேட்கிறேன். எம்பெருமானார் இருக்குமிடங்களைச் சொல்லுகின்ற அமுதனார் "உணர்ந்தமெய்ஞ்ஞானியர் யோகந்தொறும், திருவாய்மொழியின் மணந்தருமின் னிசை மன்னுமிடந்தொறும்'' என்றாப்போலே என்கதை நடைபெறு மிடந்தொறும் நான் இருந்தே தீருவேன்.

அண்ணா—அப்படி நீ சொல்லிவிடக் கூடாது. "எம்மழகனார், அணியாய்ச் சியர் சிந்தையுள் குழகனார்'' என்னநின்ற நீ எல்லாருங் காண என்பக்கத்திலே வீற்றிருந்து * ஸ சாபி ராமः பரிஷத் கதச் சனைः'' என்னும்படியாகவேணும்.

கண்ணா—என்னருமைத் தோழனான அண்ணா! பிள்ளை லோகாசார்யருடைய ஸ்ரீஸூக்திகளை நீ கண்டபாடம் செய்துவைத்து அவற்றை இன்று நீ பொய்யாக்கப் பார்க்கலாமா? "இரா மடமூட்டுவாரைப்போலே உள்ளே பதிகிடந்து ஸத்தையே பிடித்து நோக்கிக்கொண்டு போரும்'' "கண்காண நிற்கில் ஆணையிட்டு விலகுவர்க ளென்று கண்ணுக்குத் தோற்றாதபடி நின்று''...இந்த ஸ்ரீஸூக்திகளைப் பழுதாக்கப் பாப்பது தகுமா அண்ணா?

அண்ணா—ஆறுமணி அடித்துவிட்டது. உன் இஷ்டப்படி யிருந்து கேள். எட்டு மணிக்குமேல் நாம் கலந்து பேசுவோம். (தொடரும்.)

---

## திருநாங்கூர் ஸ்ரீமதுபயவே. வட்டமணி எம்பார் ஸ்ரீநிவாஸாசார்யஸ்வாமி.



திருநாங்கூரில் ஸ்ரீ புருஷோத்தமன் ஸன்னிதி வீதியில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீமதுபயவே. எம்பார் ஸ்வாமி இங்கே ஸேவை ஸாதித்தருளுகிறுர். ஸ்வாமிக்கு நேற்று கார்த்திகை மாதத்தில் எண்பது திருநக்ஷத்திரம் பூர்த்தியடைந்தது. ஞானசீல வயோவ்ருத்தர்களில் பரிகணிதராக விளங்கும் ஸ்ரீஸ்வாமியை அறியாதாரில்லை. ஏறக்குறைய ஐம்பது வருடங்களுக்கு முன்பு திருநாங்கூரி லெழுந்தருளியிருந்த பிரபல வித்வான். பிரதிவாதிபயங்கரம் பெரிய கிருஷ்ணமாசாரியர் ஸன்னிதியில் பகவத் விஷய ரஹஸ்யாதிகளை வரியடைவே கற்று ப்ரவசனத்திலும் ப்ரவீணராக விளங்கிவரும் ஸ்வாமிக்குப் பல்லாண்டு பாடுகிறேம். இவருடைய திருத்தகப்பனுர் ஐம்பதாண்டு கட்குமுன் திருமலை திருப்பதியில் சிறிய ஜீயர் ஆஸ்தானத்தை அலங்கரித்திருந்தார்.

## ஸ்ரீமதுபயவே. கோ. கம். திருமலாசாரியர் ஸ்வாமி, பிரயாகை.



இங்கே ஸேவைஸாதித்தருளாநின்ற ஸ்ரீஸ்வாமி பிரயாகையில் ஸ்ரீவேணீமாதவ மந்திரத்தில் ஆசார்ய பீடஸ்தராய் விளங்கி வருகிறுர். வடநாட்டில் சிஷ்ய ஸம்பத்து மலிந்தவர். இளமையில் ஸ்ரீபெரும்பூதூர் பாடசாலையில் ஸாஹித்ய சாஸ்த்ரங்களை யதிகரித்து ப்ரவீணராய் சிஷ்யாநுக்ரஹார்த்தமாக நெடுநாளாய் பிரயாகையில் எழுந்தருளியிருக்கிறுர். இந்த ஸ்வாமியின் முன்னேர்களில் ஒருவரான ஸ்ரீமதுபயவே. ப்ரணதார்த்திஹராசார்ய ஸ்வாமியால் பிரயாகையில் ஆர்ஜிதமான ஆசார்ய பீடத்தில் அமர்ந்து விளங்காநின்ற இந்த ஸ்வாமி நித்யஸ்ரீர் நித்யமங்களமாக விளங்க வேணுமென்று ஆசாஸிக்கிறேம்.

ஸ்ரீ:

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

# உபந்யாஸகஸௌபாக்ய மாலை

(பதின்மூன்றுவது ஸ்தபகம்)

முன்னுரை :— உபந்யாஸகர்களுக்கு உணவளிப்பதும் நமது பணிகளில் ஒன்றல்லவா? "உபந்யாஸக ஸௌபாக்ய மாலை" யென்று பெயரிடப் பெற்ற மாலையில் பன்னிரண்டு ஸ்தபகங்கள் ஸமயவிசேஷங்களில் வெளியிடப்பட்டன. பதின்மூன்றுவது ஸ்தபகமிது. (ப்ர. அண்ணங்கராசாரியார்.)

## 1. நவவிதஸம்பந்தங்களில் நல்லதொரு ஸம்பந்தம்

நம் ஆசார்ய ஸார்வபௌமர்கள் திருமந்த்ரார்த்தம் நிர்வஹிந்தருளுங்கால் அத்திருமந்த்ரத்தில், நமக்கும் எம்பெருமானுக்குமுள்ள நவவித ஸம்பந்தங்கள் தெரிவிக்கப்படுவதாக நிரூபித்தருள்வர்கள். "பிதா ச ரக்ஷகச் சேஷீ பர்த்தா ஜ்ஞேயோ ரமாபதி:, ஸ்வாமீ ஆதாரோ மமாத்மா ச போக்தா ச ஆத்யமநூதித:" என்னுமிந்த ச்லோகத்தினால் அந்த நவவித ஸம்பந்தங்களும் உணரத் தக்கன. அதில் ப்ரணவத்தின் நடுவெழுத்தான உகாரத்தின் பொருளை விவரித்தருளுமிடத்து "ஸ்தாநப்ரமாணத்தாலே உகாரம் அவதாரணார்த்தம்" என்றார்கள். எம்பெருமானொருவன் தவிர மற்றொருவற்கும் அடிமைப்படா தொழிகையாகிற அநந்யார்ஹ சேஷத்வமே உகாரார்த்தமென்று தேறி நின்றது. இது தன்னையே ஸ்ரீ குலசேகராழ்வார் தமது திருமொழியில் (5—2)* கண்டார் இகழ்வனவே காதலன் தான் செய்திடினும், கொண்டானை யல்லால் அறியாக் குலமகள் போல்* என்கிற பாசுரத்தினால் அநுஸந்தித்தார். ஒருத்தி ஒருவனுக்கே உரியவளா யிருப்பது போல ஜீவன் பரமாத்மாவுக்கே உரியவனா யிருக்க வேண்டும்படியை உகாரம் உணர்த்துகின்றது. இதுவே யாயிற்று உகாரார்த்தம். இதனை அடிப்படையாகக் கொண்டு இவ்வுபந்யாஸம் நிகழ்கின்றது. உண்மையில் பகவானுக்கு நாம் மனைவியரே.

ஸம்ஸாரிசேதநன் ஸம்ஸாரபந்தத்தில் நின்றும் விடுபட்டுத் திருநாடு சென்று சேர்வதானது பரமபுருஷனோடு பெறும் பரமபோக மஹோத்ஸவமென்று கொண்டு மகிழ்ந்திருக்கவேணுமே யொழிய, சிறிதும் வருந்தவேண்டியதில்லை யென்று தத்வ ஜ்ஞானிகள் தெளிந்திருப்பர்கள். உண்மையில் இது பாணிக்ரஹண பூர்வகபரமபோக மஹோத்ஸவந்தானென்பதை இங்கு விரிவாக நிரூபிக்கிறோம். பெண்மகளுக்கும் புருஷனுக்கும் விவாஹம் நடப்பது உலக வியற்கை. எம்பெருமான் பரமபுருஷனென்று பேர்பெற்றவனாகையாலே அவன் புருஷனென்பது நிர்விவாதம். இங்கே பெண்களாய்ப் பிறந்தவர்களுக்கு அப்பரமபுருஷனோடு விவாஹமும் போகமும் ப்ராப்தமாகலாம்; இங்கு ஆண்களாயுள்ளவர்களுக்குப் பரமபுருஷனோடு விவாஹமோ போகமோ ப்ராப்தமாவதற்குத் தகுதியில்லையே யென்று முன்னம் ஒரு சங்கை யுண்டாகக்கூடும், அது வேண்டா. ஆண்மை பெண்மையென்னும் வாசியானது அழியுந்தன்மையதான உடலிற் காணப்படுமதே யொழிய சாச்வதமான ஆத்மாவில் காணப்படுமதன்று. ஆத்மஸ்வரூபத்தை யுற்று நோக்கினால் அதற்குப் பெண்மையே இயற்கையான வடிவென்று தேறலாம். எங்ஙனே யென்னில்; திருவஷ்டாக்ஷர மஹாமந்த்ரத்தில் ஜீவாத்மாவுக்கும் பரமாத்மாவுக்கும் ஒன்பது வகையான உறவுகள் [நவவிதஸம்பந்தம்] உள்ளனவாக நிரூபிக்கப்படுவதில் பர்த்ருபார்யாபாவரூப ஸம்பந்தம் ப்ரணவத்தில் இடைச் சொல்லான உகாரத்தில் தேறுவதென்று சொன்னோம். அவதாரணார்த்தகமான உகாரத்தினால் தேறுவது அநந்யார்ஹசேஷத்வம். அதாவது எம்பெருமானொருத்தனுக்கே உரிமைப்பட்டிருத்தல், இதுவாயிற்று ஸ்த்ரீ தர்மம். ஆகவே ஜீவாத்மாவை ஒரு பெண்மகளாகவே நினைக்க

வேணும். ஆழ்வார்கள் அடிக்கடி பெண் பாவனையோடு பாசுரம் பேசுவதும் இதுபற்றியே. ஆண்க ளாய்ப் பிறந்த ஆழ்வார்கள் எதற்காகப் பெண்மையை ஏறிட்டுக் கொள்ளுகிறார்களென்று சில அறிவிலி கள் நினைப்பதும் கேட்பதுமுண்டு; அது தவறு. ஆத்மாவுக்குப் பெண்மை வந்தேறியா யிருந்தாலன்றோ அதனை ஏறிட்டுக்கொள்ளுவதாக நினைக்கலாம். அது வந்தேறி யன்றிக்கே இயற்கை வடிவமாகவே யுள்ளதென்பதும் இந்த விபாஸத்தினுல் தெளியப் பெறலாகும்.

சரீரத்திற்குப் பிறப்பு உண்டே யொழிய ஆத்மாவுக்குப் பிறப்பும் இறப்பு மில்லையென்பது ஸாதாரணமான நூற்கொள்கை. *அஸந்நேவ ஸ பவதி* [தைத்திரீய உபநிஷத்] என்கிற ச்ருதி வாக்யத்தையும், *அன்று நான் பிறந்திலேன் பிறந்தபின் மறந்திலேன்* (திருச்சந்தவிருத்தம்-64) என்கிற திருமழிசைப்பிரான் பாசுரத்தையும் உற்றுநோக்குமிடத்து ஆத்மாவுக்கும் பிறப்பிறப்புகளுண்டென்று உணரலாம். ஆத்மா பிறக்கும்போது பெண்ணாகத் தான் பிறக்கின்றதென்றும் அறியக்கிடக்கின்றது. உடலைப் பிறப்பிக்க ஒரு தாயும் ஒரு தகப்பனும் ஏற்படுகிறார்கள். அப்படியே ஆத்மாவைப் பிறப் பிக்கவும் ஒரு தாயும் தகப்பனுமுளர். இதை மஹர்ஷிகளே சொல்லிவைத்தார்கள்—*சரீரமேவ மாதா பிதரௌ ஜநயத:, ஸ ஹி வித்யாதஸ் தம் ஜநயதி தத் ச்ரேஷ்டம் ஜந்ம* என்றார்கள். இதனுல் ஆத்மாவுக்கு ஆசார்யன் பிதாவென்றும் 'வித்யா' மாதாவென்றும் விளங்கிற்று. வித்யா என்று சொல்லப்படுவது திருமந்த்ரமே யாகும். ஆசார்யன் திருமந்த்ரமுகேந ஸ்வரூபஜ்ஞானத்தை யுண்டாக்கின போது இவ்வாத்மஸத்பாவமாகையாலே (ஸ்த்ரீலிங்கசப்தமான) வித்யையை மாதாவாகவும் ஆசார்யனைப் பிதாவாகவும் கொள்ளவடுக்கும். நம்மாழ்வார் ஆசார்யனை *தஞ்சமாகிய தந்தை* [திருவாய்மொழி 3-6-9] என்கிற சொல்லால் குறிப்பிட்டனர். 1. தந்தை 2. ஆகிய தந்தை, 3. தஞ்சமாகிய தந்தை என்று மூவகைப் படுவர்கள் பிதாக்கள். 1. சரீரோத்பத்திக்கு மாத்திரம் ஹேதுவாயிருந்து *ஸ பித்ரா ச பரித்யக்த:* [ஸ்ரீ ராமா-ஸுந்] இத்யாதிப்படியே ஆபத் காலங்களிலே கைவிடுகின்ற பிதா வெறும் தந்தை. 2. உலகுக்கெல்லாம் தந்தை யென்று பேர்படைத்து ஆபத்துக்களிலும் ரக்ஷிக்குமவனான ஸர்வேச்வரன் 'ஆகிய தந்தை' எனத்தக்கவன். 3. அவனுங்கூட *ஸம்ஸாரபந்த ஸ்திதிமோக்ஷஹேது:" என்கிறபடியே ஸம்ஸாரமோக்ஷங்களிரண்டுக்கும் பொதுவாயிருப்பன்; அப்படியன்றியே ஸ்வரூபத்தை யுண்டாக்குமவனாய் ஒரு தசையிலும் கைவிடாதே ஹிதைஷியாய் உஜ்ஜீவனத்திலேயே ஊன்றிப் போருமவனா யிருந்துகொண்டு மோக்ஷைகஹேதுவாய் ஸர்வாத்மநா சரண்யனாயிருக்கு மாசார்யன் 'தஞ்சமாகிய தந்தை' எனத்தகுவன். ஆக, ஜீவாத்மாவாகிற பெண்குழந்தைக்கு வித்யை தாயென்றும், ஆசார்யன் தந்தை யென்றும் தேறிற்று.

இப்படி வித்யை என்கிற தாயினிடத்தில் ஆசார்யனாகிற தந்தையினுல் பெறுவிக்கப்பட்ட ஆத்மக் குழந்தையானது வளர்ந்துவருகிற விதம் இனிச் சொல்லப்படவேண்டும். உலகில் குழந்தையை வளர்ப்ப வர்கள் தேனும் பாலுமமுதுமான போக்ய வஸ்துக்களையிட்டு வளர்ப்பார்கள். இங்கும் அவ்வண்ண மாகவே* எனக்கென்றும் தேனும் பாலுமமுதுமாய திருமால் திருநாமம்* (பெரிய திருமொழி 6-10-6) என்றும், *எனக்குத் தேனே பாலே கன்னலே யமுதே திருமாலிருஞ்சோலைக் கோனே* என்றும் சொல்லுகிறபடியே தேனும் பாலுமமுதும் போல பரம போக்யமான பகவந்நாமங்களையும் பகவத் விஷயத் தையுமிட்டு ஆசார்ய பிதாவால் இக்குழந்தை வளர்க்கப்படுகிறது. *ஒரு மகள் தன்னையுடையேன் உலகம் நிறைந்த புகழால் திருமகள் போல வளர்த்தேன் செங்கண்மால்தான் கொண்டுபோனான்* [பெரியாழ்வார் திருமொழி. 3-8-4] என்கிற பாசுரத்தையும் சேர்த்து நோக்கினுல் இக்குழந்தையானது அநந்யார்ஹ சேஷத்வாதிகளாலே ஸ்ரீ மஹாலக்ஷ்மியோ டொக்க வளர்க்கப்படுகிற தென்னுமிடமும் திரு மாலாகிற நாயகனால் கைக்கொள்ளப்படுகிற தென்னுமிடமும் தெரியவரும்.

இப்படி குழந்தை வளர்ந்துகொண்டே செல்கின்றது. விவாஹத்திற்கு ஏற்ற வயதும் வருகின்றது. உலகில் விவாஹத்தை நடத்த முற்படுமவர்கள் பல விஷயங்களைப் பார்க்கிறார்கள். *கந்யா வரயதே ரூபம் மாதா வித்தம் ச்ருதம் பிதா, பாந்தவா: குலமிச்சந்தி மிருஷ்டாந்நமிதரே ஜநா:* என்று சொல்லு கிறபடியே, பெண்ணானவள் அழகைப்பார்ப்பள்; பெண்ணைப்பெற்றவள் ஐச்வர்யத்தை விரும்புவள்; பிதாவானவர் ஜ்ஞாநஸம்பத்தியை நோக்குவர்; உற்றாருறவினர் தாங்கள் கலந்து பரிமாறுகைக்குரிய

குலத்தை யபேக்ஷிப்பர்கள்; மற்றைப்படி வழிப்போக்கர்களா யிருப்பவர்கள் வயிறார நல்லுணவு கிடைப்பதை நோக்கியிருப்பர்கள். அழகும் செல்வமும் அறிவும் குலமுமுணவுமெல்லாம் ஒருங்கே ஒன்று சேரப்பெற்ற வரன் உலகில் வாய்ப்பது அரிதே. ஏதோ ஒன்றிரண்டு நலம் ஒன்று சேரும். இவை யெல்லாம் பரிபூர்த்தியாக ஒன்றுசேர்ந்த விடம் எம்பெருமானேயாம். அழகைப்பற்றிச் சொல்லில், *எழி லுடையவம்மனைமீர்! என்னரங்கத்தின்னமுதர் குழலழகர் வாயழகர் கண்ணழகர் கொப்பூழிலெழுகமலப் பூவழகர்* [நாச்சியார் திருமொழி 11-2] என்னும்படி யிருப்பன். செல்வத்தைப்பற்றிச் சொல்லில் *பொங்கோதஞ் சூழ்ந்த புவனியும் விண்ணுலகும், அங்காதும் சோராமே ஆள்கின்ற வெம்பெருமான், செங்கோலுடைய திருவரங்கச் செல்வனர்* [ஷை 10-3.] என்னும்படியே உபயவிபூதிநாயகத்வமாகிற செல்வம் அநந்யஸாமாந்யமானது. கல்விச் செல்வத்தைப் பற்றிச் சொல்லில் *கலைகளும் வேதமும் நீதி நூலும் கற்பமும் சொற்பொருள்தானும் மற்றை நிலைகளும் வானவர்க்கும் பிறர்க்கும் நீர்மையினலருள் செய்தவராய்,* இவர் வாயில் நல்வேத மோதும் வேதியர் வானவராவர் தோழீ* (பெரிய திருமொழி 9-2-1] என்னும்படி யிருப்பவராகை யாலே அதிலும் உயர்வறவுயர்ந்தவர். இனி குலத்தைப்பற்றிச் சொல்லிலோ *குலந்தரும்..................நாராயணவென்னும் நாமம்* (பெரிய திருமொழி 1-1-9) என்று தன் பெயரைச் சொன்னவர்களுக்கெல்லாம் மாசில் குடிப்பிறப்பைத் தருமவன் ஸ்வயம் ஸத்குலப்ரஸூத னென்பது சொல்லவேணுமோ? இனி ம்ருஷ்டான்னத்தில்தான் குறையுண்டோ? *சுணைகாணிலோவாத் தொழில் சார்ங்கன் தொல்சீரை நன்னெஞ்சே! ஓவாத வூணுக வுண்* [பெரிய திருவந்தாதி.] *உண்டு களித் தேற்கு உம்பரென்குறை* (திருவாய்மொழி 10-8-தீ) என்னும்படியாக கல்யாணகுண ம்ருஷ்டான்னம் அபரிமிதம், ஆகவிப்படி ஒன்றிலும் குறையில்லாத வரன் ஸர்வேச்வரனேயாகையாலே அந்த வானுக்கு வாழ்க்கைப்படுவதற்காகவே இந்த ஜீவாத்மக் குழந்தை வளர்க்கப்பட்டுவருகிறது. ஆனதுபற்றியே இக் குழந்தையை நோக்கிச் சொல்லுமிடத்து *பின்னைகொல் நிலமாமகள்கொல் திருமகள்கொல் பிறந்திட் டாள்!* [திருவாய்மொழி 6-5-10] என்றும், *காவியங்கண்ணி யெண்ணில் கடிமாமலர்ப் பாவை யொப் பாள்* (பெரிய திருமொழி 3-7-9) என்றும் சொல்லப்படுகிறது.

ஜநகசக்ரவர்த்தியால் பெற்று வளர்க்கப்பட்டு வந்த ஸீதாபிராட்டியானவள் *பதிஸம்யோகஸுலபம் வயோ த்ருஷ்ட்வா ச மே பிதா, சிந்தார்ணவகத: பாரம் நாஸஸாத அப்லவோ யதா* (ஸ்ரீ ராமா. அயோ. 11-8-34.) என்று தானே தன் வாயாற் சொல்லும்படியாக அவளுடைய பிதா அநுருபவரன் காணுமையாலே சிந்தைக்கடலில் ஆழ்ந்திருந்தா னென்று தெரியவருகின்றது. இந்த ஜீவாத்மக் குழந்தையைப் பெற்ற ஆசார்ய பிதா அப்படி சிந்தைக்கடலில் ஆழவேண்டிய அவசியமில்லை; தகுந்த வரனை முன்னடியே தான் ஸங்கல்பித்திருக்கையாலே அந்த வரன் இக்குழந்தைக்கும் ஸ்ப்ருஹணீயனு யிருக்கிறனு? என்பதொன்றே பார்க்கவேண்டியதாயிற்று. குழந்தையைக் கேட்கிறர் பிதா—'அம்மா! உனக்கு விவாஹத்திற்குரிய வயது வாய்த்து விட்டதே, இனி விவாஹம் நடக்கவேணுமே; யாரை நீ மணந்துகொள்ள விரும்புகிறுய்? என்று. அதற்குக் குழந்தை சொல்லுகிற விடை யாதெனில்; *வானிடைவாழு மவ்வானவர்க்கு மறையவர் வேள்வியில் வகுத்தவவி, கானிடைத் திரிவதோர் நரிபுகுந்து கடப்பதும் மோப்பதும் செய்வதொப்ப, ஊனிடையாழி சங்குத்தமற்கென்று உன்னித்தெழுந்த வென்தட முலைகள், மானிடவர்க்கென்று பேச்சுப் படில் வாழகில்லேன்* (நாச்சியார் திருமொழி 1-5.) என்றும், *அங்கைத்தலத்திடை யாழிகொண்டானவன் முகத்தன்றி விழியேனென்று, செங்கச்சுக்கொண்டு கண்ணுடையார்த்துச் சிறுமானிடவரைக் காணில் நாணும் கொங்கைத்தலமிவை நோக்கிக் காணீர் கோவிந்தனுக்கல்லால் வாயில் போகா (ஷை 12-4.) என்றும், *அன்றிப்பின் மற்றொருவற்கென்னைப் பேசலொட்டேன் மாலிருஞ்சோலை யெம்மாயற்கல்லால், கொற்றவனுக்கிவளா மென்றெண்ணிக் கொடு மின்கள் கொடாதொழில் கோழம்பமே* (பெரியாழ்வார் திருமொழி 3-4-5) என்றும் இங்ஙனேயாயிற்று விடை கூறுவது. இதுகேட்டுப் பிதாவுக்குப் பரமஸந்தோஷம்; நம் எண்ணமே இக் குழந்தைக்கு முள்ள தாயிற்றே; நாமொன்று நினைக்க இவள் வேறொன்று நினையாதபடி நாம் நினைத்த வரனையே இவளும் வரிக்கும்படியாக நேர்ந்ததே யென்று பரமானந்தமடைந்து பின்னையும் குழந்தையைக் கேட்கிறர்—குழந்தாய்! நீ பகவானை மணந்துகொள்வதாகச் சொல்லுகிறுயே; அவர் மணந்துகொள்வாரா? ஸகல ஜகத் பிதாவான அவர் ஒருவர்க்கும் பதியாகவோ பர்த்தாவாகவோ ஆகக்கூடியவரன்றே; அவரை நீ

விரும்பிப் பயனென்? என்கிறார். அதற்குக் குழந்தையின் விடை ;—'பிதாவே! ஏன் அப்படிச் சொல்லுகிறீர்? நீர் எனக்குக் கற்பித்த முதுமொழிகளில் *பதிம் விச்வஸ்யாத்மேச்வரம்* (நாராயணாநுவாகே) என்றும், *கௌஸல்யா லோகபர்த்தாரம் ஸுஷுவே யம் மநஸ்விநீ* (ஸ்ரீ ராமா. ஸுந். 38-58) என்றும், *மணவாளரவணைப் பற்பல காலமும் பள்ளிகொள் மணவாளர்* (நாச்சியார் திருமொழி 10-6.) என்றும் அந்தப் பரமபுருஷரை விச்வபதியென்றும் லோகபர்த்தா வென்றும் மணவாளப் பிள்ளை யென்றும் தெரிவித்திருக்கவில்லையா? என்னைப்போல் எத்தனையோ பேர்களுக்கு அவர் பதியாகவும், மணவாளராகவும் வாழ்கின்றவரல்லரோ? அவர் எனக்குப் பர்த்தாவாகத் தடையென்? என்றாள். அது கேட்டு உள்கனிந்த தந்தை மீண்டும் சொல்லுகிறார்—'குழந்தாய்! பல கோடி நூறாயிரம்பேர்களை. மனைவிமாராகக் கொண்டிருக்கின்ற விச்வபதி லோகபர்த்தாவை நீ மணந்துகொண்டாயாகில் பட்டமஹிஷிகளான முன்னைத் தேவிமார்கள் பலரிருக்க உன்னை அவர் கண்ணெடுத்துப் பார்ப்பரோ? ஏகதாரவ்ரதனான வொரு வரனை மணந்துகொண்டாலல்லவோ நெஞ்சு குளிர வாழலாம்; ஆலோசித்துப் பார்' என்றார்; அதற்குக் குழந்தை கூறுகின்றது—'அப்பா! என்னை நீர் பரீக்ஷிக்கிறீர் போலும்!, "அன்றீன்ற கன்றுக்குத் தாயிரங்கி முன்னணைக் கன்றையும் புல்லிட வந்தவர்களையும் கொம்பிலும் குளம்பிலுமேற்குமாபோலே பெரிய பிராட்டியாரையும் ஸூரிகளையும் விட்டு ஸ்நேஹித்துக் கொண்டு போரும்" (தத்வத்ரயம். 3-11.) என்கிற அற்புதமான சூர்ணையை நீரே சந்தைசொல்லிக் கொடுத்துவைத்து இப்போது இங்ஙனம் சொல்லுகிறீரோ; பசுவானது அன்று தான் ப்ரஸவித்த கன்றுக்கு இரங்கி முன்பு தான் ஸ்நேஹித்துக் கொண்டுபோந்த முன்னணைக்கன்றை முட்டித்தள்ளுவதும், தனக்கு போக்யமான புல்லையிடவந்தவர்களையுங்கூட கொம்பிலே கோத்தெடுத்துக் குளம்பாலே மிதித்துத் தள்ளுவதும் செய்யுமாபோலே பரிரம்பணாதிபோகங்களுக்கு ஏற்ற பெரியபிராட்டியாரையும், முன்பு ஸ்நேஹித்துக் கொண்டுபோந்த நித்யஸூரிகளையும் தள்ளிவிட்டு, இன்று கைக்கொண்டவர்களை ஸ்நேஹித்துக்கொண்டு போகிறவரன்றோ அவர், அப்படிப்பட்ட வத்ஸலரையன்றி வேறொருவரை என் மனம பற்றாது' என்று.

இது கேட்ட தஞ்சமாகிய தந்தை பரமகுதூஹலங்கொண்டு பாணிக்ரஹண மங்களத்தை நிறைவேற்றத்தொடங்கினார். *பீதகவாடைப்பிரானார் பிரமகுருவாகி வந்து* (பெரியாழ்வார் 4-2-8.) என்கிறபடியே ஆசாரியர் பரமாத்மாவினுடைய ப்ரதிநிதியாகையாலே "எட்டிழையாய் மூன்று சரடாயிருப்பதொரு மங்கலஸூத்ரம் போலே திருமந்த்ரம்" (முமுக்ஷுப்படி—113.) என்று திருமங்கலியமாகிய திருமந்த்ரத்தை (அல்லது) திருமந்த்ரமாகிற திருமங்கலியத்தைக் குழந்தைக்குக் கண்டஸ்தமாக்கினார். *பாணிம் க்ருஹ்ணீஷ்வ பாணிநா* என்று பாணிக்ரஹண ப்ரகரணம் வந்தவாறே *பறவை யேறு பரம்புருடா! நீயென்னைக் கைக்கொண்டபின்* (பெரியாழ்வார் 5-4-2) என்னும்படியாகப் பெரியதிருவடியை மேற்கொண்டு பரம புருஷன் வந்து கைக்கொண்டு பாணிக்ரஹணமங்கலத்தை நிறைவேற்றினானாயிற்று.

ஜீவாத்ம மணாட்டிக்குப் பாணிக்ரஹணமங்கலம் நிறைவேறிற்று. இக்காலத்து விவாஹமாக இருந்தால் உடனே புக்ககம் புக்கு பர்த்தாவோடே கூடிக் களிக்க ப்ராப்தமாய்விடும். இது ப்ராசீந சாஸ்த்ரரீதியின் கட்டளையான விவாஹ மாகையாலே பருவம் நிரமபின பின்பே பர்த்தாவோடு சேர வேண்டுமாதலால் பருவம் நிரம்புங்காலத்தை யெதிர்பார்த்து மணமகள் பிறந்தகத்திலேயே வாழவேண்டியதாகின்றது. அப்படி வாழுங்காலத்திலே குலமகள் நல்ல நாயகன் நமக்கு வாய்த்தும் அவனை இப்போதே யநுபவிக்க ப்ராப்தியில்லையே யென்று வருந்திக் கிடப்பதும் பரபுருஷனைக் கண்ணெடுத்தும் பாராதே தன் கணவனுடைய பெருமைகளையே சிந்தித்துப் பேசிக்கொண்டிருப்பதும், கணவனிடத்து அன்புமிக்க உறவினரிடத்து அன்பு பூண்டொழுகுவதும் அடிக்கடி கணவன் வந்து ஆசையைப் பெருக்கப் பெறுவதும், தானும் இடையிடையே புக்ககம் சென்று வருவதும், கணவனோடு இடைவீடின்றிக் கூடிவாழுங்காலம் எப்போது வாய்க்குமோ வென்று பாரித்துக் கொண்டிருப்பதும் அப்படிப்பட்ட நாள் குறுகக் குதூஹலம் விஞ்சி 'புக்ககம் போய்வருகிறேன்; பர்த்ருக்ருஹம் சென்று வருகிறேன்' என்று சிரபரிசய முள்ளவர்களிடத்தே சொல்லிக் கொள்வதுமாயிருப்பள். இந்த ஜீவாத்ம மண

